* ஏழையாயிருக்கிறான் என்று ஏழையைக் கொள்ளையாடாதே; சிறுமையானவனை நியாயஸ்தலத்தில் ஒடுக்காதே.

* கோபக்காரனுக்குத் தோழனாகாதே; உக்கிரமுள்ள மனுஷனோடே நடவாதே; அப்படிச் செய்தால் நீ அவனுடைய வழிகளைக் கற்றுக் கொள்வாய்.

* கையடித்து உடன்பட்டு, கடனுக்கு அவனுக்கு உடன்படாதே.

* உன் இருதயத்தைப் புத்தி மதிக்கும் உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் சாய்ப்பாயாக!

* மூடனுக்கு ஞானம் எட்டாத உயரமாயிருக்கும் அவன் நேர்மையைக் கண்டு அஞ்சுவான்.

* ஏற்ற சமயத்தில் சொன்ன வார்த்தை வெள்ளித் தட்டில் வைக்கப்பட்ட பொற்பழங்களுக்கு சமம்.

* கொடுப்பேன் என்று சொல்லியும் கொடாமலிருக்கிற வஞ்சகன் மழையில்லாத மேகங்களுக்கும் காற்றுக்கும் சரி.

* நீண்ட பொறுமையினால் பிரபுவையும் சம்மதிக்கப் பண்ணலாம்; இனிய நாவு எலும்பையும் நொறுக்கும்.

* ஆபத்துக் காலத்தில் துரோகியை நம்புவது உடைந்த பல்லுக்கும், மொழி புரண்ட காலுக்கும் சமம்.

* மனத்துக்கமுள்ளவனுக்குப் பாட்டுகளைப் பாடுகிறவன், குளிர் காலத்தில் வஸ்திரத்தைக் கழற்றுகிறவன்போலவும்; வெடியுப்பின்மேல் வார்த்த காடியைப் போலவும் இருப்பான்.

* உன் சத்துரு பசியாயிருந்தால் அவனுக்குப் புசிக்க ஆகாரம் கொடு; அவன் தாகமாயிருந்தால் குடிக்கத் தண்ணீர் கொடு. அதனால் நீ அவன் தலையின்மேல் எரிகிற தழல்களைக் குவிப்பாய்.

* தேனை மிகுதியாய் உண்பது நல்லதல்ல; தற்புகழை நாடுவதும் நல்லதல்ல!

* உஷ்ண காலத்திலே உறைந்த பனியும், அறுப்புக் காலத்திலே மழையும் தகாதது போல மூடனுக்கு மகிமை தகாது.

* மூடன் கையிலே செய்தி அனுப்புகிறவன் தன் கால்களையே தறித்துக்கொண்டு நஷ்டத்தை அடைகிறான்.

* மூடன் வாயில் அகப்பட்ட பழமொழி வெறியன் கையில் அகப்பட்ட முள்.

* நாயானது தான் கக்கினதைத் தின்னத் திரும்புவது போல மூடனும் தன் மூடத்தனத்துக்குத் திரும்புகிறான்.

* வழியே போகையில் தனக்கடுத்த வழக்கில் தலையிடுகிறவன் நாயைக் காதைப் பிடித்து இழுக்கிறவனைப் போலிருக்கிறான்.

* விறகில்லாமல் நெருப்பு அவியும்; கோள் சொல்லுகிறவனில்லாமல் சண்டை அடங்கும்.

* கோள்காரனுடைய வார்த்தைகள் விளையாட்டுப் போலிருக்கும்; ஆனால், அவை உள்ளத்தைத் தைக்கும்.

* பகைஞன் தன் உள்ளத்தில் கபடத்தை மறைத்து தன் உதடுகளினால் இதம் பேசுகிறான் — அவன் இனிமையாய்ப் பேசினாலும் அவனை நம்பாதே. அவன் இருதயம் அருவருப்பு நிறைந்தது.

* சத்தியத்தை வாங்கு, அதை விற்காதே; அப்படியே ஞானத்தையும், உபதேசத்தையும், புத்தியையும் வாங்கு!

* பகையை வஞ்சகமாய் மறைத்து வைக்கிறவனை அறியோ; அவனுடைய பொல்லாங்கு வெளிப்படும்.

* நாளையதினத்தைக் குறித்து பெருமைபாராட்டாதே; ஒரு நாள் பிறப்பிப்பதை அறியாயே; புறத்தியானே உன்னைப் புகழட்டும்; அந்நியனே உன்னைப் புகழட்டும்.

* கல் கனக்கும்; மணல் பாரமாயிருக்கும். மூடனுடைய கோபமோ இவ்விரண்டிலும் பாரமாம்.

* மறைவான சிநேகத்தைப் பார்க்கிலும், வெளிப்படையாகக் கடிந்துகொள்ளுதல் நல்லது; சிநேகிதன் அடிக்கும் அடிகள் உண்மையானவைகள்; சத்துரு இடும் முத்தங்களோ வஞ்சனையுள்ளவை.

* திருப்தியடைந்தவன் தேன்கூட்டையும் மிதிப்பான்; பசியுள்ளவனுக்கோ கசப்பான பதார்த்தங்களும் இனிப்பாயிருக்கும்.

* தன் கூட்டைவிட்டு அலைகிற குருவி எப்படியிருக்கிறதோ; அப்படியே தன் ஸ்தானத்தைவிட்டு அலைகிறவனும் இருக்கிறான்.

* உன் ஆபத்து காலத்தில் உன் சகோதரனுடைய வீட்டிற்குப் போகாதே; தூரத்திலுள்ள சகோதரனிலும், அண்டையிலுள்ள அயலானே வாசி.

* விவேகி ஆபத்தைக் கண்டு மறைந்து கொள்ளுகிறான்; பேதைகளோ நேரே போய்த் தண்டிக்கப்படுகிறார்கள்.

* அடை மழை நாளில் ஓயாத ஒழுக்கும் சண்டைக்காரியான ஸ்திரீயும் சரி; அவளை அடக்கப் பார்க்கிறவன் காற்றை அடக்கித் தன் வலதுகையினால் எண்ணெயைப் பிடிக்கப் பார்க்கிறான்.

* இரும்பை இரும்பு கருக்கிடும்; அப்படியே மனுஷனும் தன் சிநேகிதனுடைய முகத்தைக் கருக்கிடுகிறான்.

* வெள்ளிக்குக் குகையும்; பொன்னுக்குப் புடமும் சோதனை. மனுஷனுக்கு அவனுக்கு உண்டாகும் புகழ்ச்சியே சோதனை.

* முகதாட்சிணியம் நல்லதல்ல; முகதாட்சிணியமுள்ளவன் ஒரு துண்டு அப்பத்துக்காக அநியாயம் செய்வான்.

* தன் நாவினால் முகஸ்துதி பேசுகிறவனைப் பார்க்கிலும், கடிந்துகொள்ளுகிறவன் முடிவில் அங்கீகாரம் பெறுவான்.